Regd. No. 2975. ஶ்ரீ:

# SRI RAMANUJAN

25

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் - 274.

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 58.



பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

10—7—1971ல் வெளியிடப்பட்டது.

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 274.







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 23 | 1971ஆ ஜூலைமீ வெளியீடு<br>விரோதிகிருத்ஆ ஆனிமீ | ஸஞ்சிகை 10 |
|---|---|---|

## வைசாகோத்ஸவ நிகழ்ச்சி மகிழ்ச்சி

5—6—71 முதலாக நம் தேவப்பெருமாளுடைய வையங்கண்ட வைகாசி யுத்ஸவம் நடைபெறுமென்று முன்னிதழில் நாம் தெரிவித்திருந்தபடி இந்த மஹோத்ஸவம் வெகு சிறப்பாகவே நடைபெற்று முடிந்தது. உத்ஸவத்திற்குப் பூர்வாங்கமாகவும் உத்ஸவ மத்யத்திலும் வருண பகவான் கண் திறந்ததனுல் தீர்த்த கஷ்டம் இல்லாதிருந்தது முன்னம் குறிப்பிடத்தக்கது. சிலவாண்டுகளில் ஏதாவது சண்டை சச்சரவுகள் நிகழ்கிற வழக்கமுண்டு; இவ்வாண்டில் எவ்வித மான விவாதமும் தலைகாட்டாமல் "தழை நல்லவின்பம் தலைப்பெய்து எங்குந் தழைக்கவே" என்கிற ஆழ்வார் மங்களாசாஸனம் பலிதத தென்னும்படி பேரின்ப வெள்ளம் பெருக நடைபெற்றது அடுத்தபடியாகக் குறிப்பிடத்தக்கது.

தினப்படி பின்மாலை 4 மணிக்கு வாஹனப் புறப்பாடாகி காலை 8, 9 மணிக்குள் ஸன்னிதி சேர்வதும், மாலை 6 மணிக்கு (வாஹனு)ப் புறப்பாடாகி 11 மணிக்கு ஸன்னிதி சேர்வதுமான க்ரமம் வழுவாது நடைபெற்றது.

திருத்தேர் பெரும்பாலும் ஒரே நாளில் அல்லது இரண்டு நாளில் நிலை சேருவது வழக்கம். இவ்வாண்டில் நாலாவது நாளில் நிலை சேர்ந்தது. ஆகவே திருவோணத்தில் நடைபெறவேண்டிய அவபிரதம் உத்தரட்டாதியன்று நடைபெற்றது;. இடையில் பெரிய திருவடி ஸேவையன்று பகல் ஒரு மணி முதல் மாலை 6 மணி வரையில் பேரருளாளன் நம்மாழ்வார் ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து ஸேவை சாத்துமறை கண்டருளின பாங்கு பரம போக்யம். அவப்ருதம் கண்டருளினவன்று மாலை விளக்கொளி ஸன்னிதி வேதாந்ததேசிகன் திருவோணத் திருநாள் திருவீதிப் புறப்பாடு மஹோத்ஸவமும் சிறப்பாக நடைபெற்றது, 20—6—71ல் வைசாகோத்ஸவ ஸமாப்தியாயிற்று. ... ... ✻

# ஒரு மகிழ்ச்சிச் செய்தி

ஸ்ரீராமாநுஜன் 272ல் "தம்பிகளிருவரின் தலைதாழ்த்தி விண்ணப்பம்" (D. கிருஷ்ணமூர்த்தியும் V. N. தேவநாதனும்) என்ற கட்டுரைக்குப் பிறகு நமது சதாபிஷேகத்தைச் சார்ந்த பலகட்டுரைகள் மேலே குறித்த நண்பர்களிருவரால் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் கடைசியாக சென்னை மினெர்வா, டுடோரியல் காலேஜ் ப்ரின்ஸிபால் ப்ரஹ்மஸ்ரீ A. N. பரசுராமய்யர் M. A. அவர்களின் ஆங்கில வியாஸமொன்று பிரசுரிக்கப்பட்டிருப்பதைக் கண்ட பலர், அதற்குத் தமிழ்மொழி பெயர்ப்பு வெளியிட வேண்டுமென்கிற விருப்பத்தை நமக்குத் தெரிவித்தார்கள். அதை நாம் அந்த பரசுராமய்யரவர்களுக்குத் தெரிவித்தோம். அப்பெரியார் உடனே ஒரு சிறந்த வித்வானைக்கொண்டு தமது ஆங்கிலக் கட்டுரையின் மொழிபெயர்ப்பை யெழுதுவித்து நமக்கனுப்பினார்கள். (அஃது அடுத்த பக்கத்தில் வெளிவருகின்றது.) இக்கட்டுரை நம்மைப்பற்றின புகழுரையாதலால் இதில் நாம் மகிழ்ச்சிகொள்ளவோ அந்தமகிழ்ச்சியை வெளியிடவோ ஔசித்யமில்லை. ஆயினும் அவசாத் சில பல வார்த்தைகளை வரையவேண்டுமென்று மனம் விழைகின்றது.

ப்ரஹ்மஸ்ரீ பரசுராமய்யரவர்களை நாம் நாற்பது வருடங்களுக்கு மேலாக அறிவோம். சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில் நமது உபந்யாஸங்கள் நடந்து கொண்டிருந்தபோது பல கால் விஜயம் செய்வர். மற்றும் பல விடத்து உபந்யாஸ கோஷ்டிகளிலும் அவரைக் காணப்பெற்றதுண்டு. ஏறக்குறைய பதினைந்து வருடங்களுக்கு முன்பு ஒருநாள் இப்பெரியார் என்னைச் சந்தித்து, தம்முடைய இல்லத்தில் பத்து பன்னிரண்டு நாட்களில் ஸ்ரீராமாயண ஸுந்தரகாண்ட ப்ரவசனம் செய்து பட்டாபிஷேகம் நிகழ்த்தவேணுமென்று கோரினார். அதற்கு நான் கூறினேன்—"ஓர் இல்லத்தில் ஏகாந்தமாக உபந்யாஸம் செய்யும் வழக்கமில்லையே" என்றேன்; "அதை நான் நன்கு அறிவேன்; நானும் ஏகாந்தமாக அநுபவிக்க ஆசைப்படுகின்றிலேன்; வெளிப்புறத்து மைதானத்தில் பெரிய பந்தல்போட்டுவைத்து மஹாஸபையாகவே நடத்தியநுபவிக்க ஆசைகொண்டிருக்கிறேன்" என்றார். அதன்பிறகு இசைந்தேன். அஃதொரு பேரின்பவெள்ளமாக நடைபெற்றது. இதில் விசேஷித்து நான் தெரிவிப்பதென்னவெனில்;

ஒவ்வொரு நாளும் பிரவசனம் முடிந்ததும் ப்ரஹ்மஸ்ரீ. ஐயரவர்கள் "இன்று கேட்டறிந்த ஸாரப்பொருள்" என்று தொடங்கிப் பத்து நிமிஷம் பேசுவார்கள். அதிலிருந்து அவர்களது ஸம்பிரதாய ஞானத்தெளிவை நான் மட்டுமன்றிக்கே பலரும் அறிந்து மகிழ்ந்தவிதம் இன்று எழுதக்கூடியதன்று. எதையும் ஐயந்திரிபற உணர்ந்து கொண்டிருத்தலும் எது பேசினாலும் அழுத்தம் திருத்தமாகப் பேசும் வன்மையும், ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாய நூல்களில் உள்ளும் புறமுமொத்த அபிமானமும் நம் பரசுராமய்யரவர்களிடத்தில் நான் அநுபவித்தறிந்த உண்மைகள். அத்தகைய பெரியார் என்னைப்பற்றி ஆங்கிலத்தில் எழுதியிருந்ததை

அறிந்து கொள்ளவிருப்பம் எனக்குமிருந்தது. அதற்குத் தமிழாக்கம் செய்தவர் பேச்சிலும் எழுத்திலும் மிகச்சிறந்த புகழ்படைத்தவர் ஐயரவர்களின் கருத்தை அப்படியே ஏற்றத்தாழ்வின்றி எடுத்துக் காட்டுந்திறனை ஆங்கிலமறிந்த பெரியார்கள் மெச்சினர். இதிற்கண்ட புகழ்ச்சிகள் உண்மையில் என்னிடமிருப்பதாக நான் பிரமிப்பவனல்லேன். பெரியார்களையும் பிரமிக்கச் செய்கிற பெருமை நமக்குள்ளதென்று உகக்கின்றேனத்தனை. ... ... ...

**— இனி அந்த மொழிபெயர்ப்பின் வெளியீடு —**

# தெரிந்து தெளிந்த தெள்ளியோர்
# (P. B. A. ஸ்வாமிகள்.)

[பிரின்ஸ்பால் A. N. பரசுராம ஐயர் M.A. ஆங்கிலத்தில் எழுதியதன் தமிழாக்கம்]

தமிழாக்கம் செய்தவர்

Sri C. Jagannathachariar M.A. (Asst.)
M.A. (Tamil), L.T. P.O.L. Dip. Geng. Vidwan,
Professor of Tamil, Vivekanda College Madras.

நம்முடைய மதிப்பிற்குரிய ஆசாரியர்கள் எழுதிய அருஞ்பெரும் நூல்களைப் படிக்கும்போது நாம் அவர்களுடைய மேதையிலும், கல்வியறிவின் ஆழத்திலும், ஊடுருவிப் பார்க்கும் சக்தியிலும், இணையற்று எடுத்துக் காட்டும் வன்மையிலும் ஊறி வியப்புறுகின்றோம். ஆனால் அவர்கள் அறிவு ஈட்டுவதற்கு எவ்வளவு சிரமப்பட்டிருப்பார்கள் என்பதையே மறந்து விடுகிறோம். ஆசாரியர்கள் வாழ்ந்தபோது இருப்புப் பாதைகள் கிடையா. அச்சுப் புத்தகங்கள் கிடையா; பனையோலையேடுகளும் அருகியே கிடந்தன. பிரயாணம் செய்து சேகரிப்பதிலும் எத்தனையோ இன்னல்கள். இக்காலம் போலே சடக்கெனப் பிரித்துப் பார்த்து அறிய அரும்பதவகராதிகளோ, பிற் குறிப்புகளோ. புத்தக அட்டவணைகளோ கிடையா, இத்தனை இடுக்கண்களுக்கிடையே கற்றோர் போற்றும்படி ஒரு நூலை எழுதுதல் சாகசமான செயலாகும். அப்படிச் செய்தாலும் அதற்குப் பல ஊர்களுக்குச் சென்று விஷயங்களை யறிந்து வருதலும், ஞாபக சக்தியும் மாணவ சீடர்களின் கூட்டமும் மிக அவசியமாய் இருந்தன.

ஏன் இதையெல்லாம் கூறுகிறேன் என்றால், இத்தனை பேரிடையூறுகள் இருந்தபோதினும் மேதா விலாசப் தெரிக்கும் பெரிய நூல்கள் பல பல நூற்றுண்டுகளாக எழுதப்பட்டுள்ளன. இந்தியாவின் ஒரு மூலையில் ஒரு பெரிய அறிவாளியோ கவிஞரோ தோன்றினால் அவர் பெயர் எங்கும் பரவித் தெரிய வருகிறது. பல காலமாக, கற்றோர்கள் ஆங்காங்குச் சென்று தமது கல்விப் படிப்பை விருத்தி செய்து கொள்வதோடு பலருக்கும் போதித்து அவர்களையும் அறிவாளியாக்கியுள்ளார்கள். அக்காலத்து மாணவர்களும் ஆசிரியர்களும் பெற்ற பரிசுகள் ஆன்மீகத்

துறையிலும் அறிவு வளர்ச்சித் துறையிலும் பெற்ற பரிசுகளே. மானிடன் அறிவு ஈட்டப் பிறவியிலேயே ஊக்கங் கொண்டு முனைகிறான். "ஆவல்" என்ற பதத்தைச் சொல்ல எனக்கு இஷ்டமில்லை, ஏனெனில், ஸம்ஸ்கிருதத்தில் "ஜிஜ்ஞாஸா" என்பதன் மேலான உட்கருத்தை இச்சொல் முற்றிலும் விளக்காது. மேன்மேலும் அறியவேண்டும் என்ற இந்த ஊக்கம்தான் எல்லா ஆன்மிக அறிவுமுயற்சிகளுக்கும் அடிவேராகும். தற்காலம் வரையில் இந்தியாவில் ஆசிரியர்களும் மாணவர்களும் இந்த "அறியவேண்டும் என்ற பெருக்கத்தின்" சுடரைத்தான் பிரகாசப்படுத்தி வந்திருக்கிறார்கள். நம் நாட்டில் பெரும்பாலும் கற்றறிந்தோர் வறுமையில் வாடுபவரே. எனினும், அவர்கள் மகிழ்ச்சியோடிருக்கக் காரணம் அவர்களுடைய கல்வியூக்கமே.

ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் அத்தகைய பரந்துபட்ட அறிவாராய்ச்சி வன்மையின் உட்கருவாவர். "அறிவின் உச்சநிலையாராய்ச்சி" தான் பல நூற்றாண்டுகளாக நம் பாரதநாட்டின் கல்விமேன்மையைக் காட்டி வந்தது. பண்டைய நூலறிவாலாகும் பாண்டித்தியம் மறைய. பணத்தின் மேலும், லௌகிக வசதிகளின் மேலும் மிகுதியான ஆசை ஏற்பட்ட ஒரு சகாப்தத்தில் நம் ஸ்வாமிகளின் வாழ்வு தொடங்கலாயிற்று. அவர் மாணவராய்ப் படித்த காலத்திலிருந்த சூழ்நிலை மாறிப் பிற்காலத்தில் முற்றிலும் வேறுபட்ட சூழ்நிலையிலேயே வாழவேண்டி வந்தது அவர் தமது சிறுபிராயந் தொட்டே, சிப்பாய்க் கலகத்திற்கும் முன்னரே, பிறந்திருந்த ஆசிரியர்களோடும் மாணவர்களோடும் பயின்று பழகும் வாய்ப்புக் கொண்டிருந்தார் என்பதை மறக்கமுடியாது. அதாவது, அந்த ஆசிரியர்கள் சிறைக்குட்பட்டவை போன்ற அரசாங்கப் பள்ளிகளிலேயும் கல்லூரிகளிலேயும் படித்தவர்களல்லர். எனினும், அவர்களிடத்திலேயும் சில குறைபாடுகள் இருந்திருக்கலாம். ஆயினும், அறிவின் சுடர் அவர்களிடம் பிரகாசித்தது உண்மை. சிலர், தங்களிடம் படித்த மாணவர்களுக்கு அந்த அறிவையும் நன்கு புகட்டினார்கள். "ஊக்கத் தூண்டுதல்" என்பது திடீரென ஏற்படுவது. அதனைச் சிக்கெனப் பிடித்துக் கொள்ளவேண்டும். இத்தகைய ஊக்கத் தூண்டுதலுக்குக் காஞ்சீபுரம் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இடமாயிருந்தது. எனவே ஸ்வாமிகள் சிறு வயதிலேயே இந்த நன்முறையில் ஊக்கமுற்றார்.

சிறு வயதிலிருக்கும்போதே ஸ்ரீ அண்ணங்கராசார்யர் பலதுறை அறிவுகளிலும் ஆராத வேட்கை கொண்டார். ஓர் அந்தணச் சிறுவனுக்கு வகுத்த சம்பிரதாய முறைப்படியே பெரியோர்களிடத்தில் வடமொழியும் தமிழும் பயின்றார். ஆனால் அவர் சாதாரணமான மாணவராயிருந்திலர். "போப்" என்ற ஆங்கிலக் கவி தான் சிறு குழந்தையாயிருந்த போதே கவிதைகள் புனைய ஆரம்பித்தார். அவரைக் கேட்டதற்கு "கவிதைகள் வாக்கில் தாமாகவே வருகின்றன; நான் மழலை மொழியால் வெளியிடுகிறேன்" என்றார். அதே மாதிரி ஸ்ரீ. அ ஸ்வாமியிடத்திலும், வாலிபப் பருவத்திலிருந்தே வடமொழியிலும் தமிழிலும் கவிகள் பாடும்படியான தன்மையும், மணிப்பிரவாளத்தில் உரைநடையாக்கும் ஆற்றலும் உள்ளொளியாக நாக்கினில் அடக்க முடியாமல் வெள்ளங் கோத்தன. இந்தக்

கவித்துவ வளர்ச்சிக்கு ஆதரவு என்னுடைய கேரள தேசத்தில் கிடைத்தது. பட்டாம்பியில் நடந்து வந்த ஸம்ஸ்கிருத பத்திரிகை நம் ஸ்வாமியின் வியாசங்களை யெல்லாம் வெளியிட்டதோடன்றி அவரை 'ஆசுகவி' என்றும் 'சித்திரகவி' என்றும் போற்றியது. [ஸமஸ்யைகளைக் கொடுத்துப் பூர்த்தி செய்வது இப்போது காண் டலரிது; ஆனால், ஆங்கிலத்தில் வேடிக்கையாகப் பலர் கூடி இக் காலத்திலும் திடீரெனக் கவிதைகள் புனைவதுண்டு. இது நிற்க]

'கேட்டிலும் உண்டோர் உறுதி' என்றபடி நமது ஸ்வாமியின் தந்தையார் நோவு சாத்திக் கிடந்த போது வீட்டிலேயே பாட வகுப்புக்களை நடத்தி வந்தார்; தன்னைக் காட்டிலும் மேற்படிப்புடைய வகுப்பு மாணவர்களுக்குத் தம் தகப்பனர் பாடம் சொல்லிக் கொடுக்கும்போது இவரும் உட்கார்ந்து கேட்டு ரசிப்பார். இக் காலம் போல அத்தகைய பாடங்களைக் கடினமென்றோ, ஆயாசமாக விருக் கின்றனவென்றோ, நமக்கு வேண்டாமென்றோ ஒதுக்கவில்லை. அவைகளையும் "பருகுவனன்ன ஆர்வத்தனாகிக்" கேட்டுத் தம் அறிவைப் பேரளவில் பெருக்கிக் கொண்டார். இதன் நற்பயனைப் பின்னர் ஏற்பட்ட நிகழ்ச்சிகளால் அறியலாம். ஒரு முறை மேல் வகுப்பு மாணவர்களும் விழிக்கும்படி கேட்ட கேள்விகளுக் கெல்லாம், நம் ஸ்வாமி தக்க விடையளித்துப் பரிசோதித்தற்கு வந்த பேரறிஞர் களை வியக்க வைத்தார்.

நமது ஸ்வாமிகள் ஏதோ நுனிப்புல் மேய்வதைப் போல் படிக்கவில்லை. ஒரு விஷயத்தைப் பற்றி முற்றிலும் அறிய வேண்டும் என்ற பேராசைப் பெரும்பசி எப்பொழுதுமுண்டு. அதற்காகப் பல புத்தகங்களைப் பெறுவதிலோ, ஆசிரியர்களை அண்டுவதிலோ அவர் சிரமம் பார்த்தது கிடையாது. பல விடங்களிலிருந்த வட மொழி வல்லுநர்கள் பலரிடம் சென்று, நாடகம், காவியம், அலங்காரம், நியாயம், முதலியனவற்றைக் கற்றதோடன்றித் தமிழிலும் இலக்கண இலக்கியங்களையும் திவ்ய பிரபந்தங்களையும் மஹாவித்வான்களிடம் கேட்டறிந்து ரஹஸ்ய கிரந்தங் களையும் கற்றார். இவ்வளவிருந்தும் அவருக்கு வேதங்களை அடிபிறழாமல், அக்ஷரம் பிறழாமல், ஸ்வரம் பிறழாமல் சம்பிரதாய முறைப்படி அறியவேண்டும் என்ற எண்ணம் இருந்து கொண்டே வந்தது. கடைசியில் திருப்பதியில் தெய் வாதீனமாக ஒரு நல்ல ஆசிரியர் கிடைக்க, அவரிடத்தில் க்ரமாந்த வேதங்களை யும் நன்முறையில் கற்றுத் தெளிந்தார்.

அதன் பிறகு, ஒரே மாதிரி ஒலியுடைய வேதப்பகுதிகளை எப்படிப் பேத மறிந்து சொல்வது என்பதற்கான விதிகளை எடுத்து ஒரு நூலாக்கினார். இது ஒரு முதனூலாகும். இதனால், வருமிடமும் பொருளும் அறிந்து பல கடினமான விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளச் சாத்தியமாய் இருந்தது. இதன் பெருமை தெரியாது பலர் அழுக்காறு கொண்டு வாதிட்டதும் உண்டு. வாதம் என்பது ஒரு பொழுதுபோக்கு ஆகிவிட்டது; இப்போது, எடுத்ததற்கெல்லாம் வாதம், பட்டிமண்டபம்.

இந்த அறிவு வளர்ச்சித் தேட்டத்தில் எத்தனையோவித இன்னல்களும் மோதல்களும் ஏற்பட்டும், அத்தனை அறைகூவலுக்கும் அஞ்சாது, கூட்டொரு

வரையும் வேண்டாது. துணிகரச் செயல்களைச் செய்து வெற்றி கண்டவர் நமது ஸ்வாமி. ஆகவே, நன்முறையில் நல்லெண்ணத்தோடு நல்ல கண் கொண்டு அவர் எழுதிய வாத நூல்களைப் பார்க்கவேண்டும் மடமையும் அறியாமையும் உள்ளோர், ஐயந்திரிபுற உண்மைகளை மாற்றியும், சொந்த அபிப்பிராயங்களை யேறிட்டும் எழுதுகின்ற விஷயங்களை அவர் இறையேனும் பொறுத்துக் கொண்டு இருக்கமாட்டார்; அலசி உண்மை தெளிவிப்பார். இதனால் பல துறைப் பெரியோர் களுக்கும் சித்தாந்திகளுக்கும் அவமரியாதை செய்யவேண்டும் என்பது அவர் எண்ணமன்று; பலவித சித்தாந்தங்கள் உண்டு என்பதும் அவர் அறிந்ததே. எனினும் தானுட்டித் தறுஅது நிறுத்தல் ஒரு சிறந்த அம்சமே. ஒரு சமயம் வேறொரு சித்தாந்தத்தினர் அவரை வாதுக்கு அழைத்து அவரை நோக்கி "நீர் தோற்றுப் போனால் நும் குலக்கேற்ற பழக்க வழக்கங்களை விட்டுவிடவேண்டும்" என்று சொன்னபோது நம் ஸ்வாமி அவரை நோக்கி 'வாதத்தில் ஏற்படுகின்ற வெற்றியோ தோல்வியோ மேலையார் செய்வனகள் என்றபடி தொன்று தொட்டு வருகின்ற சிஷ்டாசாரசித்தமான சம்பிரதாயங்களை அசைக்கமுடியாது" என்றார். இந்தச் சந்தர்ப்பத்தில் ஒன்று நினைவில் கொள்ளவேண்டும் நம் ஸ்வாமியின் ஆசிரிய குரவர்களில் ஸ்மார்த்தர்கள் உண்டு; மத்வர்கள் உண்டு; வடகலையாரும் உண்டு.

ஆகவே, தத்துவரீதியில் சமயத்துறையில் நன்முறையில் வாதமிடுதலில் மனக்கசப்புக்கு இடமேயில்லை. இந்திய நாகரிகப்பண்பாட்டின் வரலாற்றிலே, இத்தகைய ஆய்வுவன்மையே பழங்கொள்கைகளை உருவாக்கவும், புதிய கருத்துக் களை உருவாக்கவும் பயன்பட்டது. வடமொழியில் ஒரு முதுமொழியுண்டு. 'மிக்க வாதம் உண்மை தெரிக்கும்' என்பது நம் ஸ்வாமி தாம் எழுதிய வாத நூல்களில் தம் சம்பிரதாயத்திற்கும், தம் சம்பிரதாய உண்மைகளுக்கும் காவலராகிப் பாடுபடுகிறார். பண்டைய ஆசிரியர்களின் வாதப் பிரதிவாதங்களைத் தற்கால நிலைக்கு ஏற்ப, நவீன முறையில் வியாக்யானமிட்டுத் தமது மதத்தை நிலை நாட்டுகிறார். இத்தகைய நற்சேவையைப் பின்வரும் ஒவ்வொரு பரம்பரை யினரும் மேற்கொள்ளுதல் அவசியம்.

அவர் செய்த முக்கிய சேவை:—பண்டைய தத்துவஞான நூல்களையெல் லாம் ஆய்ந்து அச்சேற்றி வெளியீடுகளாகக் கொணர்ந்ததுமேயே சமய நூல்கள் வெகு பிற்காலத்திலேதான் அச்சுவாகனம் ஏறியதென்பதை மறக்கக்கூடாது. இந்த இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் அநேக புகழ் பெற்ற நூல்கள் பனையேடுகளாகவே உள்ளன. நமது ஸ்வாமி பழைய பனையேட்டு நூல்களை அச்சேற்றுமவர்களில் முன்னோடியாவர். இதில் அவருக்குப் பல பெரியோர்களும், ஸ்தாபனங்களும் உதவியமை உண்மையே. இருந்தாலும் பல வருஷங்களாகத் தம்மை ஏகாக்ரசித்தமுடையராய் இதற்காகவே தியாகஞ்செய்து கொண்டமை பெரிதும் போற்றத்தக்கது.

நமது ஸ்வாமி செய்த மற்றுமொரு முக்கிய சேவை:— அநேக பிரதான நூல்களுக்குப் பல மொழிகளிலும் எளிய உரைகள் எழுதிப் பதிப்பித்தமையே.

பழைய உரைகளும், அவற்றின் நடையும், போக்கும் சாதாரணமாகப் படித்தவர்களுக்குக் கடினமாயிருப்பதால், ஸ்வாமி செய்த இந்த மஹோபகாரம் பிற்காலத்திற்குப் பெரிதும் வேண்டியதே. மற்றும் தமிழ் தாய்மொழியாய் இல்லாதவர்களுக்கு ஸ்ரீவைணவ நூல்களைப்பற்றித் தெரியாமலே யிருந்த குறை உண்டு. எம்பெருமானுருடைய உபதேசங்கள் இந்தியா முழுவதும் பரவியுள்ளதுபோல், ஆழ்வார்களுடைய பாசுரங்கள் தமிழருக்கே யன்றி மற்றையோருக்குத் தெரியாமலே இருந்தன. நமது ஸ்வாமியோ அந்தப் பாசுரங்களனைத்தையும் வடமொழியில் மொழி பெயர்த்து வடமொழியிலேயே வியாக்யானமும் இட்டருளினுர். இதனுல் 1500 ஆண்டுகளாக இல்லாதிருந்தது முதன் முதலாக இப்போதுதான் ஆழ்வார்களுடைய மயர்வற்ற மதிநலத்தை நூலின் மூலம் இந்தியா முழுவதும் பரப்பும் வாய்ப்பு ஏற்பட்டது.

நம் ஸ்வாமியின் சமயப்பற்று எழுதுவதோடும், உபந்யசிப்பதோடும் நின்றுவிட வில்லை; அதனைச் செயலிலும் காட்டினுர். கோயில் சேவை சாத்துமுறைகளில் எப்பொழுதும் அந்வயிப்பார். அதிகாலையில் இறைவன் புகழ்பாடித் தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டு காஞ்சீபுரத்துப் பேரருளாளன் கோயிலைப் பிரதக்ஷிணம் வரும்படி பல ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளை உருவாக்கியுள்ளார். திருவாய்மொழி ஈடு சாதித்தருளிய நம்பிள்ளைக்கு நன்றிக்கடனுற்ற அவருக்கு ஒரு பெரிய சந்நிதியைக் காஞ்சியில் நிர்மாணஞ் செய்து, சிறப்பொடு வழிபாடுகளை யாற்றிவர நியமமும் பணித்துள்ளார். பல க்ஷேத்திரங்களுக்கும் புண்ணியத் துறைகளுக்கும் யாத்திரையாகச் செல்லும்போது பல பேரை உடனழைத்துச் சென்று சத்காரியங்களில் ஈடுபடச் செய்துள்ளார். எல்லாவற்றிற்கும் மேலாகப் பல மாணவர்களை வைணவ சமயத்துறையில் பணிசெய்யப் பயிற்சி யளிக்க ஒரு பாடசாலையை நிறுவியிருக்கிருர்.

இவற்றிற்கெல்லாம் அடிப்படைக் காரணம், நான் முன்பு கூறியதுபோல், இவருக்கு ஏற்பட்ட 'பல்துறை அறிவு ஊக்கமே'. நம் ஸ்வாமி புராதன இந்தியாவின் ஆன்மீக சக்தியின் உரு; எனினும், அவ்வக்கால நிலைமைகளுக்கேற்பத் தம்மை அமைத்து ஆக்கிக் கொள்ளும் பெருந்தகையாளர். இவ்வகையால் இவர் ஒப்பிறையும் பெறலரிய ஒரு 'தனித்தாபனமே' யாவர். இவரது சொற்பொழிவுகளைக் கேட்கும்போது நமக்குப் பகுத்தறிவும், நல்ல எண்ணங்களும், கவிகளின் பெருமையும், கதையின் சாரமான போக்கும், ஆராய்ச்சிப் பான்மையும் நெஞ்சில் படுகின்றன; மற்றும் நகைச்சுவையும் பெறுகிருேம். நம்மையே மெய்ம்மறந்து நிற்கிருேம். இவர் பேச்சைக் கேட்போர் அனைவரும் அவரவருக்கேற்ற வகையில் திருப்தியடைவர். கற்றறிந்தவர் அவருடைய ஞாபக சக்தியையும், சந்தர்ப்பங்களில் அவர் கொடுக்கும் மேற்கோள்களையும் கண்டு வியப்புறுவர்; பக்தியில் ஈடுபட்டுப் பரவசமாவர்; ஒன்று மறியாத மூடனும் இறையுண்மையின் பெருமையினை உணர்வன். அவர் பேச்சுக்கள் இக்காலத்துக்கு மிகவும் ஏற்பவையாய்க் கற்பனையைத் தூண்டிப் பிராசீன சம்பிரதாயங்களின் பெருமைகளையும் காட்டி, நம் வாழ்க்கை சமையவேண்டிய வழியையும் காட்டுவன.

இறுதியாக, நம் ஸ்வாமி தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் வைணவ ப்ரவசனத்திற்கும் சமய சேவையின் மூலம் சமூகத்திற்கும் அர்ப்பணித்துள்ளார். அவரே இந்தச் சீரிய குறிக்கோளை வகுத்துக் கொண்டு தாம் எடுத்துக் கொண்ட மேலான பணிக்குச் சேவை செய்வதன் மூலம் தமக்கு ஈடிலாப் பெருமையைத் தேடிக் கொண்டார். பூர்வாசார்ய வியாக்யானங்களில் பரிபூரணமான தூய அறிவாற்றல் பெற்றவர் யாராவது இவர் கண்ணில் அகப்பட்டால் உடனே அவருடைய பெருமையை யுணர்ந்து அவரிடமிருந்து ஊக்கமும் ஆக்கமும் பெற முனைவது இவர் பண்பு. இத்தகைய ஒருவரைப் போன்ற பரம்பரை இனி வாராது. இவரைக் கௌரவிப்பதால் நாம் நம் ஸநாதன தருமத்தைப் போற்றுவதோடு, அந்தத் தர்மத்தைக் கட்டிக்காத்த ஆசார்ய பரம்பரையினரையும் போற்றுபவரா வோம். தமது எழுத்துக்களின் மூலமாகவும், சொற்பொழிவுகளின் மூலமாகவும், தாம் பயிற்றிய சீடர்களின் மூலமாகவும், தாபித்த நிறுவனங்களின் மூலமாகவும், கணக்கற்ற ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் அறிவுச் சுடரை ஏற்றிவைத்து, நல்ல பாதையிலே நடக்கச் செய்கிறார்; மற்றும், இறைவனிடத்து வைக்கும் பக்தியாலும், சேவையாலும் அவனடியாரிடத்துச் செய்யும் கைங்கர்யத்தாலுமே சாந்தியையும் சந்தோஷத்தையும் பெறமுடியும் என்று இவர் காட்டிய பாதையைப் பின்பற்றி முன்னேறுவோமாக! தமக்குப் பின்வரும் சந்ததியாரையும் முன்னேற்றுவோமாக.

---

ஸ்ரீ:

## கடிதம்

(புதுவை-திருமால்திருநெறிமன்றத் தலைவர்கள்)

இந்நகரில் பெருமாள் கோவிலில் சதாபிஷேக மகோற்சவம் கண்டருளிய ஸ்ரீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி உ. வே. மகாவித்வான் ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய சுவாமிகளின்

# பாராட்டுவிழா.

விரோதிகிருதுஹு ஆனிமீ 7-ம் நாள் (21—6—71) திங்கட்கிழமை மாலை 6½ மணி யளவில் ஸ்ரீ வரதராஜப்பெருமாள் சந்நிதியில் திருமால் திருநெறிமன்ற அங்கத்தினர்களும் நகரப் பெருமக்களும் பாகவதோத்தமர்களும் மிகுந்த மகிழ்ச்சிப் பெருக்குடன் பூர்ணகும்பம் கொண்டு சுவாமிகளை வரவேற்றார்கள். புதுவை பிரஞ்சு கலைக்கழகத்தின் ஸம்ஸ்க்ருதத்துறைத் தலைவர் Dr. N. பட் அவர்கள் சுவாமி கட்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்து, பின் சுவாமிகட்கு வரவேற்புப் பாராட்டிதழ் (சுலோக ரூபமாக) வாசித்து அளித்தனர் வழக்கறிஞர் திரு ஸ்ரீநிவாஸ ஐயங்கார் M.A., B.L., அவர்கள், சுவாமிகளின் சொல்வன்மை குறித்து

தாம் இளமை முதல் கேட்டறிந்த அனுபவத்தைக்கூறினர்; திருமால்திருநெறி மன்றத் தலைவரும் மொழியாக்கச் செல்வருமாகிய திரு ரா. தேசிகப்பிள்ளை அவர்கள் B A., B L., சுவாமிகளின் செயல் ஆற்றும் திறனையும், முன்னின்று தொடங்கியவை யாவும் மேன்மேலும் விளங்குவதையும், அதற்கு சுவாமிகள் தொடங்கி வைத்த இம்மன்றமே சான்று என்றுரைத்தார்; முன்னாள்பாராளுமன்றஉறுப்பினரும் அருங்கலை விநோதரும் ஆகிய T. N. சேதுராமன் அவர்கள் சுவாமிகளின் பண்பினையும் சிறப்பினையும் கூறினர். அதன்பிறகு, திருச்சி, திருக்கச்சிநம்பிசபைத் தலைவரான உயர்திரு K. P. S. ஸுந்தரராஜன் செட்டியாரவர்கள் எழுதியனுப்பியிருந்த கட்டுரை வாசிக்கப்பட்டது; அது வருமாறு;—

# திருக்கச்சிநம்பி ஸபை, திருச்சி.

கச்சிநகர்வந்துதித்த கருணைமுகிலே!

திருக்கச்சிநம்பிகள் பூவிருந்தவல்லியில் அவதரித்து. காஞ்சிமாநகர்க்கு எழுந்தருளி அத்திகிரி யருளாளனுக்கு அனுதினமும் அவனுகக்கும் திருவாலவட்ட கைங்கர்யத்தை அவன் திருமுகமலர்த்திக் குறுப்பாகவும், ஹோமகுண்டத்தில் தோன்றிய அவன் தாபம் தீரவும் செய்துவந்தார். அந்த மஹானிடமே தான் வரதராசப்பெருமாள் வார்த்தையாடி வந்ததாகவும், ஸ்வாமி எம்பெருமானுர்க்கு அவர் மூலமாகவே ஆறுவார்த்தைகள் அருளிச் செய்ததாகவும் அதனடியாக "எம்பெருமானார் தரிசனம்" தழைத்து ஓங்கியது என்பதும் சரித்திரப்பிரஸித்தம். அத்திருக்கச்சிநம்பிகளின் திருநாமத்தையுடைய சபையைச் சார்ந்தவர்களாகிய அடியோங்கள் தேவரீரை அத்திருக்கச்சி நம்பியின் அபராவதாரமாகவே கருதுகிறோம். திருவாலவட்டகைங்கர்யத்தினால் திருமேனிக்குச்சிரமம் தீரும். ஆனால் திருவுள்ளத்துக்கும் குளிர்த்தி ஏற்படவேணுமே? அதற்கு ஆழ்வார்களின் ஈரச் சொற்களைத்தவிர வேறு ஒன்று உண்டோ? இதை உணர்ந்த திருக்கச்சிநம்பிகள், அதே காஞ்சியில் ஏழாட்காலும் பழிப்பிலாததும், எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன், ஏழ்படிகால் தொடங்கிவந்து வழி வழியாட்செய்யுமதாயும் உள்ள தொண்டக்குலத்திலே மறுபடியும் அவதரித்தார். தேவரீர் கடந்த 65–ஆண்டுகளுக்கும் மேலாக உபயவேதங்களிலும் அறியக்கற்றுவல்ல வைட்டணவராய்த் திகழ்ந்து ஒருநாளும் ஒருபொழுதும் விடாது அத்திகிரி அருளாளனுக்கு ஸகலதாபங்களும் தீரும்படியாய் செய்துவரும் வாசிககைங்கர்யம் ஒன்றே இவ்வவதார ரஹஸ்யத்தை ஸூசிப்பிப்பது. தேவரீர் இல்லாமல் காஞ்சியில் தேவப்பெருமாள் உத்ஸவம் கண்டருளினதாக உன்மத்தனும கூறான் என்பது உலகோரறிந்த உண்மை.

அத்திருக்கச்சிநம்பிகள் மூலம் உய்யும ஆறு அருளினான் அவ்வருட்கடல். தேவரீர் மூலமாக உலகம் உய்யுமாறு ஆறு அன்று—தன்னாசார்யனான மணவாளமாமுனிகள் விஷயமாக 600 வார்த்தைகள் அருளிச்செய்வித்தான். திருக்கச்சிநம்பியுடன் வார்த்தையாடினான்; தேவரீருடனும் வார்த்தையாடிக் கொண்டிருக்க

வேணும். அது அவனும் தேவரீரும் அறிந்ததொன்று. எம்பெருமானுர் போன்ற ஒரு மஹான் இவ்வுலகததில் இக்காலத்தில் இருந்தாலல்லவோ இது வெளிப்படும்.

ஆகவே தேவரீரை திருக்கச்சிநம்பிகளின் அபராவதாரமாகவே அடியோங்கள் துணிவுடன் எண்ணிவருகிருேம்.

தேவரீருடைய காலக்ஷேபகோஷ்டியைப் பார்த்தால் தேவரீர் நம்பிள்ளையின் அபராவதார மென்னலாம்படியுள்ளது. ஸ்ரீரங்கத்தில் ஸ்வாமி நம்பிள்ளை யெழுந்தருளியிருந்தபோது அவரது காலக்ஷேபகோஷ்டி கலைந்து ஸ்ரீவைஷ்ணவர்கள் எழுந்தருளாநிற்க, பலர் "இது நம்பெருமாள் கோஷ்டியோ, நம்பிள்ளை கோஷ்டியோ" என்று கேட்பார்களாம்.

அதேபோன்றதே தேவரீர் காலக்ஷேப கோஷ்டியும். தேவரீர் வர்ஷிக்கும் அர்த்த விசேஷங்களைக் கேட்கவேண்டாம் தேவரீர் காலக்ஷேப கோஷ்டியை ஸேவித்திருந்தாலே போதும். ஸ்ரீரங்கத்தில் இன்றும் நம்பெருமாளை ஸேவிப்பதற்கு முன்பு நம்பிள்ளை கோஷ்டிக்குத்தானே எல்லோரும் தலைவணக்கிக் கை கூப்பித் தொழுது செல்கின்றனர்.

ஆகவே தேவரீர் காலக்ஷேப கோஷ்டியைக் கண்ணுரக்கண்டாலே பிறவிப் பிணிதீருமாகையாலே தேவரீர் நம்பிள்ளையின் அபராவதாரமே.

தேவரீர் தற்சமயம், மணவாளமாமுனி 600-வது ஆண்டுவிழா கண்டருளிய ஸாதாரண வருடத்தில் சதாபிஷேக மஹோத்ஸவம் கண்டருளியுள்ளது. ஆதிசேஷனே எம்பெருமாளின் உத்தரவின்பேரில், முதலில் எம்பெருமானுராக 120 ஸம்வத்ஸரங்களும், பிறகு மணவாளமாமுனிகளாக 75-ஸம்வத்ஸரங்களுக்கும் மேலாகவும் எழுந்தருளியிருந்ததாகவும் நாம் அறிகிருேம். அதேபோன்று தேவரீரும் 200க்கும் மேலான அநேக சதவருஷங்கள் எழுந்தருளியிருந்து இச் சம்ஸாரிசேதநர்களை திருத்தித் திருமகள் கேள்வனுக்காக்கி "வையம்மன்னி விற்றிருந்து விண்ணுமாளவேணும் மண்ணூடே" என்று தியாகராஜனுய், அர்த்தி தார்த்தபரிதான தீக்ஷிதனுய் எழுந்தருளியிருக்கும் வரதராஜனை பெருந்தேவித் தாயாரை முன்னிட்டுக்கொண்டு சரணம் புகுந்து பிரார்த்திக்கிருேம்.

திருச்சி
19—6—71

K. P. S. SUNDARARAJAN CHETTY.

இறுதியாக தமிழ்ப் பெரும் புலவர் வி. பூதூர் கி. வெங்கடசாமி ரெட்டியார் ஸ்ரீமதாண்டவன் திருவடி) அவர்கள் பேசியதன் சுருக்கம் :—

சுவாமிகளின் செயற்கருஞ் செயற் பேராற்றலை எண்ணும்போது இதனைப் பாராட்டுக்கூட்டம் என்று சொல்வதினும் வழிபாட்டுக் கூட்டம் என்பதே பொருத்தம். சுவாமிகளின் செயற்கருஞ் செயல்கள் நம்மால் கூறி முடிவு பெருது. நம் நாட்டில் எல்லா மடங்களும் சேர்ந்து செய்யும் தொண்டுகளை ஒரு தட்டிலும் சுவாமிகளின் தொண்டை ஒருதட்டிலும் வைத்துச் சீர்தூக்கிப்பார்த்தால் சுவாமிகளின் தொண்டே ஓங்கி நிற்கும். சுவாமிகள் ஒருவராகவே இருந்து செய்யும் செயற்

கருஞ் செயல்கட்கு பல மடங்களும் சேர்ந்துசெய்யும் செயல்கள் ஈடாகா; ஒரு மொழியில் வல்லவராதலே அரிது; அதனினும் சொற்பொழிவாற்றுதல் அரிது; அதனினும் கவியியற்றுதல் அரிது; ஒன்றிருப்பின் ஒன்றிராது; இவ்வன்மையாவும் தமிழ் மொழியில்மட்டும் அன்றி வடமொழியிலும் நம்சுவாமிகட்கு அமைந்த திறன் போற்றிப் பாராட்டிப் புந்தியில் கொள்ளத்தக்கதாகும். இதைக்காட்டிலும் சுவாமி களின் பெருமைக்கு எதை எடுத்துச் சொல்ல முடியும்? இவைதாஞ? இந்தி, தெலுங்கு, வடமொழி, தமிழ்மொழிகளில் மாதந்தோறும் பத்திரிகைகள் வேஞெரு வர் துணையின்றித் தாமே வெளியிடுகின்ஞர்கள். இத்துணைஆற்றலும் பெருமை யும் வாய்ந்த நம் சுவாமிகளைப்போல இன்னெருவரை நினைத்துப் பார்க்கவும் முடியாது; சுவாமிகள் ஒருவர் என்று முதலில் முதல் சுண்டுவிரலை முடக்கி இரண் டாவதாக ஒருவரைச் சொல்லிச் சுண்டுவிரலுக்கு அடுத்த அணிவிரலை முடக்குவ தற்கு வேஞெருவர் கிடையாது. இதே கருத்தை வில்லிபுத்தூர் ஆழ்வார் துரோணுசாரியரைக் குறிப்பிடும்போது—

'அதிரதர் தம்மை எண்ணில் அணிவிரல் முடக்கஒட்டா
முதிர்சிலைக்குரு' என்று சிறப்பித்துக் கூறினர்.

அதேபோல் நம் சுவாமிகளின் பெருமையைச் சொல்லுதற்கு நாம் வல்லரல்லோம்.

பகவானைச் சொல்லவேண்டுமாஞல் அவனுக்கு இணையாகச் சில பொருள் களைச் சொல்லலாம்; அவன் அடியார்கட்கு இணையாக ஒன்றையும் சொல்லமுடி யாது என்று சுவாமி தேசிகன் அருளியுள்ளார், அப்பாசுரம்:—

'அலையற்ற ஆரமுதக்கடல், அக்கடலுண்டமுகில்,
விலையற்ற நன்மணிவெற்பு, வெயில்நில வோங்குபகல்
துலையுற்றன என்பர் தாமரை சூடுந் துழாய் முடியாற் (கு)
இலை ஒத்தன அவன் பாதம்பணிந்தவர்க் கெண்ணுதற்கே.'

இதஞல் அடியார்கட்கு நிகராக ஒன்றையும் ஒருவரையும் சொல்ல இய லாது என்பதஞல் நம் சுவாமிகளின் சிறப்புக்கு நிகர் சுவாமிகளேதான் என்று திடமாகக் கூறலாம்—என்று கூறிமுடித்தார்.

பின்னர் சுவாமிகள் ஆசிகூறுமுகமாக, பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்னும் பகவானுடைய ஐந்து நிலைகளையும் அவற்றின் சிறப்புக்களையும் ஸ்ரீவசந பூஷண ஸ்ரீஸூக்திவாயிலாகத் தமக்கேயுரிய சிறந்தமுறையில் விரித் தருளிச் செய்து சபையை மகிழ்வித்தரர்கள். பிரஞ்சுகலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் திரு. வி. சுப்பிரமணிய ஐயர் அவர்கள்.

'வண்ணங் கரியான் மலரடியை வாழ்த்திநிற்கும்
அண்ணங்க ராசார்ய அண்ணலே—மண்ணுலகில்

எண்பதாண் டெய்தி இருக்கும்நீர் எங்கட்கா
எண்ணிலா நூற்ருண் டிரும்!

என்ற வெண்பாவைக் கூறினர்கள்.

இறுதியில் ஸ்ரீவரதராஜப்பெருமாள் திருப்பணிக்குழுவின் சார்பில் சுவாமிகட்குத் திருமாலை அணிவிக்கப்பட்டது ஜயகோஷத்துடன் சபை கலைந்தது.

---

## ஸம்ஸ்க்ருதபாஷையின் ஸௌபாக்யம்.

நம்முடைய வைதிக மநோஹரா என்னும் ஸம்ஸ்க்ருத பத்திரிகையின் ஜூன்மாத ஸஞ்சிகையில் ஸம்பாதகீய மென்கிற தலைப்பின்கீழ் (வடமொழியில்) நாம் எழுதியிருந்ததாவது — இவ்வுலகின்கண் எத்தனை பாஷைகள் வழக்கிலுள் ளனவோ அத்தனை பாஷைகளிலும் தினப்பத்திரிகைகளும் வாரப்பத்திரிகைகளும் பக்ஷப்பத்ரிகைகளும் மாதப்பத்ரிகைகளும் வெளிவந்துகொண்டிருக்கின்றன. தினசரிப் பத்ரிகை வெளிவரப் பெருதபாஷை தேடிப்பிடிக்கவேண்டியதாகும் ஸகல பாஷைகளினும் மிகச் சிறந்து தாய்ப்பாஷையென்று குலாவப்படுகின்ற ஸம்ஸ் கிருதபாஷையில் இந்நிலவுலகம் முழுவதிலும் எத்தனை பத்ரிகைகள் வெளிவருகின்றனவென்று வினவினுல் வெளிவரும் விடை வருந்தத்தக்கதேயாம் நாம் வித்யார்த்தி தசையிலிருந்தபோது விஜ்ஞான சிந்தாமணி, ஸம்ஸ்க்ருத சந்த்ரிகா. ஸூந்ருதவாதினீ, மித்ரகோஷ்டி, ப்ரஹ்மவாதிநீ—என்றிப்படி பல ஸம்ஸ்க்ருத பத்ரிகைகள் வெளிவந்துகொண்டிருந்தன. அஸ்மதாசார்யபாதரான ஸ்ரீஜகத்குருகாதிஸ்வாமி தொடங்கின மஞ்ஜு பாஷிணீ பத்ரிகையை நாம் இருபத்தைந்து வருஷகாலம் நடத்திவந்தோம். அதைத்தான் இப்போது நாம் வைதிக மநோஹரா என்னும் பெயரினுல் வெளியிட்டு வருகிருேம். அக்காலத்தில் ஸம்ஸ்க்ருத பத்திரிகைகளுக்கு விசேஷமான பிரசாரமிருந்து வந்தது. இக்காலத்தில் அது மிகக் குன்றியிருப்பதுபற்றி வருந்தவேண்டியிருக்கிறது......இத்யாதிகளை யெழுதியிருந்தோம்.

இந்தவருத்தம்தீர நாமறிந்த வொரு செய்தியைத் தெரிவிக்கிருேம். மைஸூர் மஹாநகரத்திலிருந்து ஸுதர்மா என்கிற ஸம்ஸ்கிருத பத்ரிகை பத்து மாதங்களுக்கு மேலாக தினசரியாக நடந்துவருகிறது. பெரிய புல்ஸ்கேப் ஸைஜில் இரண்டே பக்கமான ஒரேகாகிதந்தான் ஞாயிற்றுக்கிழமை தவிர மற்ற நாட்களில் பிரசுரிக்கப்பட்டுவருகிறது. இதுவரை 300 பத்ரிகைகள் வெளியாயின. பத்திரிகை யொன்றின் விலை 5 நயாபைஸா. மாதச் சந்தா, வருடச் சந்தாவென் கிற திட்டங்களுமுண்டு. அழகிய தேவநாகரலிபியில் எளிய நடையில் பிரசுரிக்கப் பட்டுவருமிந்த ஸம்ஸ்க்ருத பத்ரிகை மேன்மேலும் ஓங்கி வளரவேணுமென்று ஆசாஸிக்கிருேம். இப்பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீமான். பண்டித K. N. வரதராஜய்யங்கார். விலாஸம்—"Sudharma" Sri Kantha Power Press. 561, Ramachandra Agraharam, Mysore 4. இப்பத்ரிகைக்கு அரசாங்கவுதவியும் கிடைத்து வருவதாகத் தெரிவதால் அபிவிருத்தியடையுமென்று மகிழ்கிருேம். ... *

---

# ராதையென்கிற கோபியைப்பற்றின விசாரம்.

கர்னூல் ஜில்லாவைச்சேர்ந்த ஸிமெண்டு நகர் என்னும் ஊரிலுள்ள ஸ்ரீமான் C; ராதாகிருஷ்ணய்யா, B.SC., M.A., என்னும் பெரியார் ஆங்கில பாஷையில் நமக்கொரு கடிதமெழுதியுள்ளார். அதன் மொழிபெயர்ப்பு வருமாறு:—

SRI C. RADHAKRISHNIAH, B.SC., M.A., 24—6—71.
Cement Nagar P. O., (Kurnool Dt.)
நமஸ்காரங்கள்.

ஆந்திர இலக்கியத்தில் ராதாக்ருஷ்ணர்கள் சிறந்ததோரிடத்தைப் பெற்றிருக்கிறார்கள். ராஸலீலையைப் பற்றித் தெலுங்கில் கவியியற்றப்பட்டுமிருக்கிறது; "ராதா மாதவமு", "ராதிகா ஸ்வாந்தநமு" என்பன முக்கியமான பத்ய காவ்யங்கள். தெலுங்கின் தற்கால ஆராய்ச்சியாளர்கள் ராதையை கண்ணனின் அத்தை யென்று கூறிவருகின்றனர். அவளை ப்ருதா (அல்லது குந்தி) என்று ஐயுறுகின்றனர். இத்தன்மைத்தாய விமரிசனம் தெலுங்கு ஸாஹித்யத்து நாஸ்திகர்களுடையதாம். இக் கருத்தினைத் தவறென்று யான் எண்ணுகின்றேன். இத்தகையவற்றைக் கண்டித்துத் தக்க எடுத்துக்காட்டுகளுடன் உண்மையை உணர்த்தலை என் கடமையாக மதிக்கிறேன் இதன் பொருட்டு யான் ஆராய்ந்த சில க்ரந்தங்களாவன, (1) ஸ்ரீமத் பாகவதம் (ஸம்ஸ்க்ருதம் & தெலுங்கு) (2) ஹரி வம்சம் (தெலுங்கு) (3 விஷ்ணு புராணம் (தெலுங்கு) (4) கீத கோவிந்தம் (ஸம்ஸ்க்ருதம்) (5) ஸ்ரீ க்ருஷ்ண கர்ணாமிருதம் (ஸம்ஸ்க்ருதம்) பாகவதத்தில் இராதையின் பெயர் காணப்படவில்லை. ஸ்ரீ விஷ்ணு புராணம் ஹரிவம்சங்களிலும் ராதை குறிப்பிடப்படவில்லை. ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களிலும் திருப்பாவையிலும் ராதையைப் பற்றிய குறிப்புக் கிடையாது. நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் ராதா மாதவலீலையைப் பற்றிக் குறிப்புள்ளதாவென்று ஐயுறுகின்றேன். குறிப்பு ஏதேனுமிருப்பின் அருள் கூர்ந்து தெரியப்படுத்த வேண்டுகிறேன். ஸ்ரீ பாகவதத்தின் கர்த்தாவைப்பற்றியும் கருத்து வேற்றுமை யிருப்பதாகத் தமிழராய எனது நண்பர்மூல மறிந்தேன், ஸ்ரீ பாகவதம் வ்யாஸரால் இயற்றப்பட்டதன்று என்றும் இதனைச் செய்தவர் ஒரு தென்னிந்தியர் என்றும் அவர் கூறுவர். பாதராயணரை ஸ்ரீ பாகவத ரசயிதாவாக நீலகண்ட வ்யாக்யா கூறுகிறது. சங்கராசார்யர் பாகவதந்தைப் பற்றிக் குறிப்பிடாமையின் பாகவதம் பாதராயணருடைய தன்றென்கிறார் எனது நண்பர். இஃது உண்மையா? அங்ஙன் ஆயின் அந்தத் தென்னிந்திய ஆசிரியர் யார்? இவற்றைத் தயவுசெய்து விரைவில் தெரியப்படுத்துமாறு வேண்டுகிறேன்."

இது அந்தப் பெரியவருடைய ஆங்கிலக் கடிதத்தில் கண்டவிஷயம். இத்தகைய ஸந்தேஹங்கள் நமது தமிழ்நாட்டிலும் பலர்க்கு இருப்பதால் இவர்களும் தெளியுமாறு இங்கு விடையிறுக்கப்படுகிறது. ராதை என்கிற வ்யக்தியைப்பற்றி நாம் ஆராய்ந்தவரையில் இதிஹாஸபுராணங்களில் எங்கும் காணப்படவில்லை

ஆந்திர காவியங்களிற்போல் ஸம்ஸ்க்ருத காவியங்களிலும் காண்பதுண்டு. கீதகோவிந்தமியற்றிய பரமபக்தரான ஜயதேவர் அதில் மங்களச்லோகம் "ராதாமாதவயோர் ஜயந்தி யமுநாகூலே ரஹ: கேலய:" என்று அமைத்திருப்பது ப்ரஸித்தம். அந்த க்ரந்தத்தினுள்ளேயும் ராதையின் பெயர் வருகிறது. மற்றும் பல முக்தகச்லோகங்களும் ராதையைப்பற்றினவை குவலயானந்தம் முதலான அலங்கார நூல்களில் காணப்படுகின்றன. "பத்மே த்வந்நயநே ஸ்மராமி....... ஸருஷா நிர்பர்த்ஸிதோ ராதயா" இத்யாதிகள் காண்க. கண்ணன் வேணுகானத்தில் சில கோபிகளின் பெயரையிட்டுப் பாடுவதாக வைத்து "காந்தே ராதே! மமாப ராதே மாகுரு ஸக்தம் தவ சித்தம்" என்று ராதையை விளித்து என்குற்றத்தை எண்ணுதேயென்று பாடினதாக ஒரு கவி கூறுகிருர். இங்ஙனே பலவுண்டு.

ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களில் ராதையைப்பற்றின பேச்சே கிடையாது. ருக்மிணிப் பிராட்டியைப்பற்றி நம்மாழ்வார் திருவாய்மொழியில் ஓரிடத்திலும், பெரியாழ்வார் தமது திருமொழியில் இரண்டிடத்திலும், ஆண்டாள் தமது திருமொழியில் ஓரிடத்திலும் கூறியிருப்பதுதவிர வேறிடங்கிடையாது. நப்பின்னைப் பிராட்டியைப்பற்றிக் கூறியுள்ள இடங்களோ அபரிமிதம். தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணுழ்வார் ஆகிய இருவர்தவிர மற்றுள்ளவாழ்வார்களனைவரும் நப்பின்னைப் பிராட்டியைப் பலகால் கூறியுள்ளார்கள். திருப்பாவையில் மட்டும் நப்பின்னையென்றுள்ளது; மற்ற திவ்யப்பிரபந்தங்களில் பின்னையென்றுள்ளது. இவளுக்கு வடமொழிப்பெயர் நீலா என்பதாகக் கூரத்தாழ்வான் பட்டர் நிகமாந்தகுரு (யாதவாப்யுதயே) இவ்வாசிரியர்களின் ஸ்ரீஸூக்திகளினுல் அறிகிறேரம். இந்த திவ்யமஹிஷியைப் பற்றின ஆராய்ச்சியாக நாம் தனிநூல் இட்டிருக்கிறேரம்.

வடமதுரையின் பிராந்தங்களில் வ்ரஜபூமிகளில் நாம் ஸஞ்சாரம் செய்த போது நந்தகாம், பர்ஷாணு என்கிற இரண்டு ஊர்களுக்குப் போயிருந்தோம். நந்தகாம் என்கிறவிடம் நந்தகோபருடைய ஜன்மஸ்தானமென்றும், பர்ஷாணு என்கிறவிடம் ராதையின் ஜன்மஸ்தானமென்றும் சொல்லுகிருர்கள். ராதை என்கிற வ்யக்தியை இல்லை செய்யமுடியாது. மதுராப்ருந்தாவனப்ராந்தங்களில் பக்தர்களின் வாக்கில் ராதேச்யாம்! என்று பன்முறையும் கேட்கலாகும். கண்ணனுக்கு ச்யாமஸுந்தரனென்று ஒரு பெயர். அதில் ஏகதேசமாக ச்யாமனென்பதையும் ராதையையும் சேர்த்து ராதேச்யாம் என்று கூறிவருகிருர்கள் வழி நடந்துகொண்டு போம்போது ஒரு பக்தர் மற்றொரு பக்தரைக் கண்டால் ராதே ச்யாம்! என்று சொல்லாமலிரார். வடநாட்டில் ராதையைத் தவிர ருக்மிணி ஸத்யபாமாதிகளையும் அறியாதவர்கள் பல்லாயிரவருளர்.

நாற்பது வருடங்களுக்கு முன்பு நடந்தவொரு வ்யவஹாரத்தை இங்கு ப்ரஸ்தாவிக்கிறேன். வடஇந்தியாவில் மஹாதனிகரான ஒரு ஸேட் ப்ருந்தாவனத்திலுள்ள ரங்கமன்னுர் ஸன்னிதிக்கு ஒரு லக்ஷம் ரூபாய் தன்னுடைய ஸமர்ப்பணையாக எழுதிவைத்து சாஸனமிட்டுக் காலஞ்சென்றுவிட்டார். அவ

ருடைய ஸந்ததியார் அந்த தனத்தை அந்தக் கோவிலுக்குச் சேர்ப்பிக்க மறுத்து விட்டார்கள். அதற்கு என்னகாரணமென்றால், அந்த கோவிலில் ராதையின் விக்ரஹம் ஆராதிக்கப் படுவதாகவும், ராதையானவள் சூர்ப்பணகையின் அம்ச மாகச் சொல்லப்பட்டிருப்பதாகவும், ராக்ஷஸ விக்ரஹமுள்ள கோவிலுக்கு ஆஸ்தி கர்கள் தர்மஞ்செய்யத் தகுதியில்லை யென்பதாகவும் சிலகாரணங்கள் கூறி அந்த ட்ரஸ்டு செல்லாதென்று மறுத்துவிட்டார்கள். உண்மையில் ப்ருந்தாவனம் ஸன் னிதியில் ராதாவிக்ரஹம் கிடையவே கிடையாது. ராதை சூர்ப்பணகையின் அம்ச மென்பதும் ப்ராமாணிகமன்று; ஆனாலும் வியவஹாரம் கிளம்பிவிட்டது. கல்கட்டா நீதிமன்றத்தில் இந்த வழக்கு விசாரணைக்கு வந்தது. அதில் நம்மைப் பண்டித ஸாக்ஷியாக தேவஸ்தான அதிகாரிகள் கோரியிருந்தார்கள் அதற்காக நாம் அப்போது கல்கட்டா சென்றிருந்தோம். இதைத் தெரிந்துகொண்ட எதிர்த் தரப்பு வக்கீல் நம்முடைய ஜாகைக்குவந்து (தன்னை வக்கீலாகக் காட்டிக்கொள் ளாமல் ஒரு பக்தனுகக் காட்டிக்கொண்டு) பேசுகையில் நம்மிடத்தில் சில விஷயங் களைத் தெரிந்துகொண்டு, பிறகு தன்னை எதிர்த்தரப்பு வக்கீலாக வெளியிட்டு 'இந்த வழக்கு நீதிமன்றத்தில் நடவாது, ராஜியாகிவிடும்; உங்களுக்கு சிரமம் நேராது; தாங்கள் ஊருக்குத் திரும்பலாம்'' என்றார். பிறகு. வாதிகளான தேவஸ் தான அதிகாரிகளும் அவர்களது வக்கீலும் இப்படியே தெரிவிக்க, நாம் திரும்பி வந்துவிட்டோம். வழக்கு ராஜிநாமாவில் முடிந்துவிட்டதென்பதையும் தெரிந்து கொண்டோம். ராதை சூர்ப்பணகையின் அம்சம் என்கிற வாதம் தோன்றியிருந்தது என்பதற்காக இந்த வரலாற்றை இங்கு நாம் உதாஹரித்தோம். அந்த வாதம் பிராமாணிகமன்று. ராதையைப்பற்றி இதிஹாஸபுராணங்களிலோ திவ்யப் பிரபந்தங்களிலோ ப்ரஸ்தாவம் கிடையாதென்பது உறுதி. ராதாகிருஷ்ணன் என்கிற நாமகரணம் உலகில் நீண்டகாலமாக எங்கும் பரவியிருப்பது அபலபிக்கமுடியாத தாகையால் கண்ணபிரானுடைய காதலிகளில் அவளையும் ஒருத்தியாகக் கொள்வ தில் குறையில்லை. அவளைக் கண்ணனின் அத்தையென்று கூறுவது ஆதாரமற்ற தும் வெறுக்கத்தக்கதுமாகும். இனி ஸ்ரீ பாகவதத்தைப்பற்றிக் கூறுவோம்.

## ஸ்ரீ பாகவதத்தின் பெருமை

பன்னிரண்டு ஸ்கந்தங்கள் கொண்டதான ஸ்ரீ பாகவதத்தை சுகமஹர்ஷி யின் திருவாக்காக உலகமெல்லாம் நம்பி மெச்சிப் பாராயணம் செய்து வருகின் றது. தென்னாட்டைவிட வடநாட்டில் ஸ்ரீ பாகவதத்தின் ஏற்றம் அபரிமிதமானது. ஸ்ரீ பாகவதத்தோடொத்ததும் அதைவிடமிக்கதுமான புராண நூல் வேறு கிடையாதென்பது வடநாட்டினரின் திடநம்பிக்கை. இரவும் பகலும் இதனையே பாராயணம் செய்து போதுபோக்கும் பக்தர்கள் வடநாட்டில் பல்லாயிரவர். அடியேன் அயோத்திக்குப் பலகால் சென்றிருக்கிறேன். அங்கு ஸ்ரீ ராமாயண மன்றோ வீறுபெறவேண்டும். அங்கும் ஸ்ரீ பாகவதத்திற்கே ஏற்றம் பொலிகின்ற தென்பதைப் பல்கால் கண்டிருக்கிறேன். இத்தகைய வைபவம் வாய்ந்த ஸ்ரீ பாகவதம் மஹர்ஷிப்ரோக்தமன்றென்றும்: நம்முடைய பூருவாசாரியர்களால் ஆதரிக்கப்படாததென்றும் ஓர் அபக்யாதி சிலரிடத்தில் நடையாடக் காண்

கிறேம். நம்முடைய பூருவாசாரியர்கள் ஸ்ரீ பாகவதத்திலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் காட்டவில்லையென்று சொல்லமுடியாது. ஸ்ரீ ராமாயணம் ஸ்ரீ விஷ்ணு புராணம் முதலானவற்றிலிருந்து எடுத்துக் காட்டுவதுபோல் அவ்வளவு விசேஷமாக ஸ்ரீ பாகவதத்திலிருந்து எடுத்துக் காட்டவில்லையென்று சொல்லலாமே தவிர வேறு விதமாகச் சொல்ல இயலாது. "தாஸாமாவிரபூத் சௌரி: ஸ்மயமாந முகாம்புஜ:, பீதாம்பரதரஸ் ஸ்ரக்வீ ஸாக்ஷாந் மந்மதமந்மத:" என்கிற சுலோகத்தைப் பூருவர்கள் வியாக்கியானமும் செய்தருளியிருக்கிறார்கள். அது ஸ்ரீ பாகவத ச்லோகமே. *க்ரியோ வர்ஷதாராபிர் ஹந்யமாநா ந விவ்யது:, அபிபூயமாநா வ்யஸநைர் யதா அதோக்ஷஜசேதஸ:*என்று ஆசார்யர்கள் அஸக்ருத் உதாஹரிக்கும் சுலோகமும் ஸ்ரீ பாகவதஸ்த்தமே. கோபிகாகீதாதிகளையும் உதாஹரித்துள்ளார்கள். *கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:, க்வசித் க்வசிந் மஹாபாக! த்ரமிடேஷு ச பூரிச:. தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச.........* இத்யாதி, முக்கியமாக எடுத்துக்காட்டும் சுலோகங்களும் ஸ்ரீ பாகவதத்திலுள்ளவையே. இங்ஙனே பலபலவுள.

ஸ்ரீக்ருஷ்ணவதார விஷயத்திலும் மற்றும் தத்வவிஷயங்களிலும் நம் ஆசார்யர்கள் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைத் தலையான பிரமாணமாகக் கொண்டார்களென்பது உள்ளது. அதற்குக் காரணம் ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் "தத்வேந யச் சிதசிதீச்வர......" இத்யாதி ச்லோகத்தாலே பராசரமஹர்ஷியைப் போரப் பொலியக் கொண்டாடியிருப்பதேயாம். பேராசிரியர்கள் யாவரும் அந்த மஹர்ஷியின் திருவாக்கான ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலே மிக்க ஈடுபாடு கொண்டதற்கு ஆளவந்தார் ஸ்ரீ ஸூக்தியே மூலம். அவ்வாளவந்தார் வால்மீகி மஹர்ஷியைத் துதிக்கவில்லையென்று அவருடைய ராமாயணத்தை அநாதரிக்கலாகுமோ? இராமாநுசநூற்றந்தாதியில் எம்பெருமானுர்க்கு ஸ்ரீ ராமாயணத்திலுள்ள ப்ராவண்யம் மட்டுமே பேசப்பட்டிராநின்றது. இதனுல் அவர் ஸ்ரீவிஷ்ணு புராணாதிகளை மதிக்கவில்லை யென்றதாகுமோ?

நமது தென்னுட்டிலுங்கூட ஸ்ரீபாகவதஸப்தாஹபாராயணத்தை ஒருயஜ்ஞமாக அனுஷ்டித்துப் போருமவர்கள் பலருளர். ப்ரஸங்காத் இங்கு நிர்வேதத்துடன் தெரிவிக்கவேண்டியதொன்றுண்டு; நிருபபதமான ஸ்ரீ பாகவதம் விளங்காநிற்க, சக்தி பூஜகர்கள் சிலர் தேவீபாகவதமென்று ஸோபபதமாக வொன்றைக் கல்பனை செய்து இதுதான் பாகவதமென்று தவருன பிரசாரம்செய்துவருகிருர்கள். வாஸுதேவபகவான் விளங்காநிற்கப் பௌண்ட்ரகனென்பான் நான்தான் வாஸுதேவனென்று கிளம்பினதொக்கு மிது. ஸர்வாத்மநாபி அவிச்வஸநீயமான அந்த தேவீபாகவதம் மாத்ஸர்யபரிபூர்ணமநஸ்கர்களால் கல்பிதமென்பதை விவேகிகள் யாவரும் எளிதாக அறியக்கூடுமாதலால் இதைப்பற்றின பேச்சை இவ்வளவோடு நிறுத்திக்கொள்ளுகிறேன். ஸ்ரீ பாகவதசந்த்ரசந்த்ரிகையென்றும் முநிபாவப்ரகாசிகையென்றும் ப்ரஸித்தமான இரண்டு வியாக்கியானங்களைக் கொண்டு ஸ்ரீ பாகவதத்தின் சப்தார்த்த ரஸங்களையநுபவிப்பார் பாக்யசாலிகள்.

---

# விவாஹோத்ஸவ நிகழ்ச்சி





நேற்று வைகாசிமீ 20 ஆம் தேதி (3.6.71)வியாழக்கிழமையன்று காஞ்சீபுரம் கீழண்டைமாடவீதியில் ஸ்ரீமான் உவே. திருக்கோட்டியூர் சாத்துப்படி ஸ்ரீநிவாஸ வரதாசாரியருடைய செல்வக்குமாரன் சிரஞ்சீவி. ராமாநுஜாச்சாரியென்கிற அண்ணாச்சிக்கும் திருக்கோட்டியூர் T S. கிருஷ்ணமாசாரியர் குமாரத்தியான ஸௌபாக்யவதி. விஜயலக்ஷ்மிக்கும் நடைபெற்ற விவாஹத்தைச் சார்ந்த உருவப்படங்களிவை. சாத்துப்படி ஸ்ரீநிவாஸவரதாசாரியர் பாஞ்சராத்ர ஆகமப்ரக்ரியைகளில் நல்ல தேர்ச்சி பெற்றவர். பல வருஷம் திருவெஃகா ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதியில் திருத்தகப்பனாரும் தாமுமாகத் திருவாராதன கைங்கரியம் நிர்வஹித்து வந்தவர். இவருடைய முன்னோர்கள்

திருக்கோட்டியூரிலிருந்து சில நூற்றாண்டுகட்கு முன்பு இவ்விடம் வந்து சேர்ந்து தேவப்பெருமாள் தேவஸ்தானத்தில் சாத்துப்படி கைங்கர்ய மிராசுபெற்றவர்கள். (அதாவது) வஸ்த்ர கொட்டடி பரிபாலன கைங்கரியம். மிக்க பொறுப்புடன் நிர்வஹிக்கவேண்டிய கைங்கரியமிது. இவர் இளமையில் நம்முடைய பாடசாலையில் அந்வயித்திருந்து நாலாயிரதிவ்யப் பிரபந்தங்களை நன்கு ஓதினவர். தேவப்பெருமாள் திருவுள்ளமுகந்த அத்யாபக கைங்கர்யத்தை நாடோறும் நிர்வஹித்து வருபவர். இவர்க்கு இப்போது ஸம்பந்தியாக வாய்த்தவர் Bombayயில் உத்யோகஸ்தராயிருந்து வருகிறார். பரம ஸாத்விகமான இந்த குடும்பங்களும் தம்பதிகளும் நீங்காத செல்வம் நிறைந்து விளங்கவேணுமென்று ஆசாஸிக்கிறோம். இங்குப் பெரிய உருவப்படத்தில் (எனது வலதுபுறத்தில்) தம்பதிகளும் ஸம்பந்திகளும் நிற்கிறார்கள். இடதுபுறத்தில் ஸ்ரீ திருமலை ஈச்சம்பாடி விஜயராகவாசாரியரும், உபயவேதகண்டீரவ தி. வி. சிங்கராசாரியரும் நிற்கிறார்கள். சிறிய உருவப் படத்தில் ஸ்ரீ உவே. பெரு. ஸுதர்சனதாதாசாரியர் என்னருகே வீற்றிருக்கிறார். மணமகன் மங்களாசாஸனோபந்யாஸங் கேட்ட உவப்பினால் ஸம்பாவனை ஸமர்ப்பிக்கிறான்.

— நல்லபதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே. —

---

# ஸ்ரீமந்நாதமுனிகள் சாத்துமுறை

நம்மாழ்வார்க்கு இருவர் சிஷ்யர்கள். விபவதசையில் சிஷ்யர் மதுரகவிகள். யோகதசையில் சிஷ்யர் ஸ்ரீமந்நாதமுனிகள். வைகாசிமாதத்தில் திருவவதரித்தார் நம்மாழ்வார். சிஷ்யர்களில் முதல்வர் முந்தின சித்திரை மாதத்திலும், மற்றொருவர் பிந்தின ஆனிமாதத்திலும் திருவவதரித்தார்கள். விசாக நக்ஷத்திரததில் திருவவதரித்தார் நம்மாழ்வார்; மதுரகவிகள் அதற்குமுந்தின சித்திரை நக்ஷத்திரத்திலும், நாதமுனிகள் பிந்தின அநுராதா நக்ஷத்திரத்திலும் அவதரித்தார்கள். நம்மாழ்வாரைக்காட்டிலும் மதுரகவிகள் பிராயத்தில் பெரியவர் என்பது ஸம்பிரதாயமாதலால் அதற்குச்சேர அவர் மாதத்திலும் நக்ஷத்திரத்திலும் முற்பட்டிருக்கிறாரென்று சமத்காரோக்தி.

இவ்விரு சிஷ்யர்களும் அர்ச்சாவதாரத்தில் தனித்தனியே திருக்கோலங்கொண்டு தனித்தனியே கோயில் கொண்டிருக்குமிருப்பு பல திவ்யதேசங்களிலிருந்தாலும் கச்சித் தேவப்பெருமாள் ஸன்னிதியில் மட்டும் ஆசார்ய சிஷ்யர்கள் மூவரும் ஒன்றுசேர்ந்தே திருக்கோலங்கொண்டிருப்பது விசேஷம். நேற்று 5—7—71 அநுராதா நக்ஷத்திரத்தில் நாதமுனிகள் சாத்துமுறை வெகு சிறப்பாக நடந்தேறியது. தேவப்பெருமாள் அன்றுமாலை ஸன்னிதிவீதி யுத்ஸவங்கண்டருளி நம்மாழ்வார் ஸன்னிதிக்கெழுந்தருளி ஸேசவஸாத்துமுறை அற்புதமாகக் கண்டருளினர்.

---

## கம்பர்பெருமான் காப்புச்செய்யுள்

கம்பர் தமது ராமாயணத்தில் ஒவ்வொரு காண்டத்தின் முகப்பிலும் காப்புச் செய்யுள் [கடவுள் வணக்கம்] இடுகிருர். அந்தச்செய்யுள்கள் பெரும்பாலும் சீரிய வேதாந்த விழுப்பொருளைக் கொண்டிருக்கும், யுத்தகாண்டத்தின் காப்புச்செய்யுள் மிக வழகியது; மிகச்சிறந்த பொருள் கொண்டது. அது வருமாறு:—

"ஒன்றேயென்னி னென்றேயாம் பலவென்றுரைக்கிற் பலவேயாம்
அன்றேயென்னி னன்றேயாம் ஆமென்றுரைக்கி னுமேயாம்
இன்றேயென்னி னின்றேயாம் உளதென்றுரைக்கி னுளதேயாம்
நன்றேநம்பிகுடிவாழ்க்கை நமக்கிங்கென்னே பிழைப்பம்மா."

— இதன்பொருளைச் சுருக்கமாகவுரைக்கின்றேம் —

[ஒன்றேயென்னின் ஒன்றேயாம்] அத்வைதமேயென்றல் அப்படியே யாகலாம், ஈச்வரன் ஒருவனேயுளன் என்பது அத்வைதம், இதை நாம் மறுக்கவேண்டிய அவசியமில்லை யென்றபடி. நாம் அத்வைதிகளன்றே; அத்வைதமதத்தைக் கண்டிப்பவர்களல்லவா? ஸ்ரீபாஷ்யம் முதலிய மஹாக்ரந்தங்கள் அத்வைதத்தைக் கண்டிக்கவன்ரே தோன்றியவை; அப்படியிருக்க இங்ஙனம் சொல்வதை ஏற்கத் தகுமோ? என்று மருளவேண்டா? விசிஷ்டாத்வைதமென்பதிலும் அத்வைதந் தானே யுள்ளது. வீடு ஒன்று. அதில் நூற்றுக்கணக்கான பண்டங்கள் இருக்கின்றன; ஆனுலும் வீடென்பது ஒன்றுதானே, இனி, மேல்வாக்கியத்தைக் காண்மின். [பலவென்றுரைக்கிற் பலவேயாம்.] த்வைதமென்றல் த்வைதமேயாகும் என்றபடி. நாம் த்வைதிகளோவென்று கேட்கவேண்டா; விசிஷ்டாத்வைதமென்பதில் (விசிஷ்ட) என்பதற்கு "விசேஷண விசிஷ்ட" என்றுதானே பொருள். பரமபுருஷனிடத்தில் விசேஷணமாகியுள்ள பொருள்கள் பலபலவே யாதலால் அவற்றை நோக்குமளவில், பரமபுருஷன் எல்லாப் பொருள்களிலும் எள்ளினுள் எண்ணெய்போலக் கரந்திருப்பதனல் பலவென்று கொள்ளவுங் குறையில்லை.

[அன்றேயென்னின் அன்றேயாம்] உலகில் காணப்படும் சந்திரன் ஸூரியன் முதலிய சுடர்ப்பொருள்களைக் காட்டி 'பகவான் அதுபோன்றிருப்பனே? இதுபோன்றிருப்பனே? என்றல், எதைப்போன்றவனுமல்லன் என்னவேண்டி யிருப்பன். "ப்ரஹ்மா சிவச் சதமகஃ பரமஸ் ஸ்வராடிதி ஏதேபி யஸ்ய மஹிமார்ணவ விப்ருஷஸ் தே" என்று ஆளவந்தாரருளிச் செய்தபடி தன்பெருமைக்கடலில் ஒரு திவலையளவான தேவர்களில் ஒருவரையும் தனக்கு உபமானமாகச் சொல்லத்தக்கவனல்லன், [ஆமென்றுரைக்கின் ஆமேயாம்] • ஸமுத்ர இவ காம்பீர்யே • என்றும், • ஸோமவத் ப்ரியதர்சநஃ • என்றும் • சந்த்ரகாந்தாநநம் ராமம் • என்றும் • கை

வண்ணம் தாமரை வாய்கமலம்போலும் கண்ணிணையு மரவிந்தம் அடியுமஃதே • என்றும் உபமானங்களிட்டுச் சொல்லக்கூடிய நிலைமையையும் தாங்கி நிற்பன்.

[இன்றேயென்னின் இன்றேயாம்] கடவுள் இல்லையென்பார்க்கு இல்லையாகவே யிருப்பன். உலகில் ஒரு வஸ்துவை யெடுத்து 'இஃது இல்லை' என்னும்போதைச்கு இங்கில்லை, இப்போதில்லை என்றதாகுமேயொழிப அடியோடில்லை என்றதாகாதாதலால் இல்லையென்பதும் உண்மையைய ஸாதித்துத் தருமென்கிற மருமமறியாதார் ஈச்வரனில்லையென்று சொன்னால் இல்லையென்கிற சொல்லுக்கு இலக்காயிருந்து கொண்டு உளனேயாவன்.

[உளதென்றுரைக்கில் உளதேயாம்] 'ஈச்வரஃ அஸ்தி' என்றால் எப்படி அவனுடைய உண்மை தேறுகின்றதோ அப்படியே 'ஈச்வரஃ நாஸ்தி' என்றாலும் அஸ்தித்வமே தேறிநிற்கும் என்று இதனால்காட்டினபடி. * உளனெனிலுளன் அவனுருவமிவ் வுருவுகள், உளனலனெனில் அவனுருவமிவ்வுருவுகள் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின் பொருளை வியாக்கியானங்கள் கொண்டு உணர்க.

இப்படி மூன்றடிகளையிட்ட கப்பர் நான்காமடியை [நன்றேநம்பி குடி வாழ்க்கை நமக்கிங்கென்னோ பிழைப்பம்மா] என்றிட்டார். * கோணைபெரிதுடைத்து எம்பெம்மானைக் கூறுதலே * என்ற திருவாய்மொழியின்படி நிலையிடவொண்ணாததான பகவானுடைய தன்மையை மாஞானிகளறிந்து உய்யலாமேயன்றிப் புல்லறிவாளர்களான நாமறிந்து பிழைக்கவழி ஏது? என்பதாக ஒருபொருள். பிழைப்பு என்பதற்கு பிழைபடுதல் என்பதும் பொருளாதலால் எப்படிச் சொன்னாலும் பிழையாகாது என்பதும் கருத்தாகும். இத்தால் ''மம மாதா வந்த்யா'' (என் தாய் மலடி) என்றாற்போன்ற வார்த்தைகளையும் சொல்லவிடலாமென்றதாக ஆகாது. ஸப்தபங்கீ போன்ற வ்யவஹாரங்களையும் செய்துவிடலாமென்றதாக ஆகாது. சாஸ்த்ரார்த்த தத்துவத்தை உள்ளபடியறிந்தவர்கள் எப்படிச் சொன்னாலும் பொருந்தவைக்க முடியும் என்பது கருத்து. சித்தும் அசித்தும் ஈச்வரனுமாகிய மூன்று தத்துவங்கள் யதார்த்தமாகவுண்டென்கிற உணர்ச்சியில் கோளாறு இல்லாதவர்கள் 'ஒன்றே தத்துவம்' என்றாலும் ப்ரமாதமொன்றுமில்லை; ஆனால் பல தத்துவங்களுண்டென்கிற உண்மையை மறுக்கப் புகுந்தால் பங்கமடைந்தே தீருவர்கள். * ஒட்டுரைத்திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதி! * என்ற திருவாய்மொழியின்படி 'எம்பெருமான் ஒத்தாரும் மிக்காருமில்லாதவன்' என்கிற திடமான ஞானமுடையார் அவனுக்குச் சில உபமானங்களையிட்டுப் பேசினாலும் ப்ரமாதமொன்றுமில்லை. 'எம்பெருமான் குணவிக்ரஹ விபூதியுக்தனாய் எஞ்ஞான்று மெங்கு மொழிவற நிறைந்து நிற்கும் புருஷோத்தமன்' என்ற திடமான ப்ரத்யயமுள்ளவர்கள் * ஆணல்லன் பெண்ணல்லனித்யாதி சொல்லிவிட்டாலும் ப்ரமாதமில்லை—என்பது பரமதாற்பரியம்.

இதே நியாயத்தில் இங்கு வேறு சில விஷயங்களையும் எடுத்துக்காட்டாக நினைவூட்டுவோம். (1) எம்பெருமானுடைய கருணை நிர்ஹேதுகம் என்று தெளிய

அறிந்தவர்கள் அது ஸஹேதுகம் என்றாலும் குறையில்லை. எப்படி யென்னில்; அவன் தானே ஒரு ஹேதுவைக் கற்பித்தோ ஏறிட்டோ அருள்செய்வதாகச் சொல் லித் தீரவேண்டி யிருப்பதாலும் ரஹஸ்யத்ரய ஸாராதிகளில் அப்படிச் சொல்லி யிருக்கையாலும் அதுதன்னை ஹேதுவென்றிட்டு ஸஹேதுகமென்னலாம். பர்யவ ஸானம் நிர்ஹேதுகத்வத்தில் தானேயாகும். இந்த மருமமறியகில்லாதார் சாந்தனை யும் நிர்ஹேதுகத்வ கண்டனம் செய்துகொண்டு கிடக்கட்டுமே. (2) ப்ரபத்தி உபாயமன்று என்று ப்ரமாண சதங்களால் திடமாக அறிந்தவர்கள் 'ப்ரபத்தி உபாயம்' என்றாலும் குடிகெட்டுப் போய் விடாது. உபாயசதுஷ்டயம் என்று சொல்லிக் கணக்கிடுகையில் கர்மஜ்ஞான பக்திப்ரபத்திகள் என்று கணக்கிட வில்லையா? ஸ்ரீவசனபூஷணத்தில் "ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்களொன்று மில்லை" என்றவிடத்து ப்ரபத்த்யுபாயமென்று நிர்தேசித்திருக்கவில்லையா? திருக் கச்சிநம்பி யாறுவார்த்தைகளில் ❀ மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத் ❀ என்பதும் ஒரு வார்த்தையாயிருக்கவில்லையா? (3) மோக்ஷப்ரதானத்தில் பிராட்டிக்குப் புருஷ காரத்வம் மட்டுமேயுள்ளது என்கிற தெளிவுடையவர்கள் 'பிராட்டி மோக்ஷ ப்ரதானம் பண்ணுகிறாள்' என்று சொல்லிவிட்டாலும் குறையில்லை. எம்பெரு மானுரை மோக்ஷப்ரதாதாவாக நூற்றந்தாதியில் ❀ஞானங்கனிந்த பாசுரம் முதலான வற்றிலும், திருவாய்மொழியை மோக்ஷப்ரதமாகத் திருவாய்மொழிதன்னிலே பல பாசுரங்களிலும் சொல்லியிருப்பதுபோல. (4) பரமாத்மாநுபவபாஹ்யனுய் ஆத் மாநுபவ நிஷ்டனான கேவலனுக்கு ப்ரஹ்மாநுபவமுமுண்டென்று சொல்லிவிட் டாலும் குறையில்லை. அவன் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுபவத்தைக் கோலின வனாகையாலே அவனுக்கு விசேஷணதயா ப்ரஹ்மாநுபவமு முண்டாகையாலே. (5) எம்பெருமானை விட ஆசார்யனே உபகாரகன் என்கிற திடமான கொள்கையை உடையவர்கள் "ஆசார்யனைக் காட்டிலும் ஈச்வரனே மஹோபகாரகன்" என்று சொல்லிவிட்டாலும் குறையில்லை. தன்னைவிட மிகவுயர்ந்தவனான ஆசார்யனை உபகரித்தவன் ஈச்வரனேயாதலால்.

## — உபஸம்ஹாரம் —

வேதாந்தத்தில் ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்தமான சரீராத்மபாவத்தைத் திடமா கத் தெரிந்துகொண்டவர்களாய் எம்பெருமானுடைய பரத்வத்தையும் தேவதாந் தரங்களினுடைய அவரத்வத்தையும் பேர்க்கவும் பேராதபடி தெரிந்துகொண்டிருப் பவர்கள் "முனியே நான்முகனே முக்கண்ணப்பா" "அரியை அயனை அரனையலற்றி". "பூத்தண்டுழாய் முடியாய் புனைகொன்றையஞ் செஞ்சடையாய் வாய்த்தவென்னான் முகனே" என்றாலும் குறையில்லாதாப்போலே—'சேதநன் பக்கலில் விளைகிற விளைவுகளெல்லாம் ஈச்வரனுடைய ஸ்ருஷ்ட்யவதாராதிமுகத்தாலே பண்ணின க்ருஷிபலம்' என்கிற பிள்ளைலோகாசார்ய நிஷ்கர்ஷத்தையும், இதன் மொழிபெயர்ப் பான 'நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:' என்கிற வேதாந்ததேசிக நிஷ்கர்ஷத்தையும் உள்ளபடி யுணர்ந்தவர்கள் எம்பெருமான் தலையிலுள்ளவற்றை சேதநன் தலையிலே யேறிட்டு எதுசொன்னாலும் எதையும் எம்பெருமான் தலை

தாங்குமேயொழிய சேதநன்தலை ஈஷத்தும் தாங்கமாட்டாது. பத்தியுழவன் என்று திருமழிசைப்பிரானும், * தம் த்வாம் க்ஷேமக்ருஷீவலம் ஹலதரம் ரங்கேச! பக்தா ஸ்மஹே * என்று பட்டரும், * ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம் * என்று நிகமாந்தமஹாதேசிகனும் ஒருமிடறாக அருளிச்செய்தவற்றை குருமுகமாகக் கேட்டுணர்ந்தவர்கள் 'அவனை நாமே பற்றுகிறோமா? அவன் பற்றுவிக்கப் பற்றுகிறோமா'' என்பதை யாராய்ந்து அறியகில்லாதே ஸ்வகதஸ்வீகாரம்—ஸ்வகதஸ்வீகாரம்—ஸ்வகதஸ்வீகாரம் என்று கனவிலும் இதுவே வாசகமாய்க் கிடந்தாலும் இது பொருளற்ற பாஷிதமென்பதைப் பேதையனும் எளிதிலறிவன்.

வேதாந்தத்தில் வாக்யார்த்தஞ் சொல்லி வெற்றிபெற சக்தியற்றவர்களும் * யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாத் அவித்யாதம:ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ரமந்திமயுகே கச்சித் விபச்சித்தம:, தத்ரைகத்ர ஜடித்யுபைதிவிலயம் தத்தந்மதஸ்தாபநா ஹேவாகப்ரதமாநஹைதுக கதா கல்லோல கோலாஹல: * என்று தேசிகன் ஸாதித்த கணக்கிலே ஒன்றைமட்டுமறிந்து அநாயாஸமாக வெற்றி பெறுமாபோலே ''நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:'' என்கிற தேசிக திவ்ய ஸூக்தியொன்றைமட்டும் திடமாகக் கொண்டவர்கள் * காம்பறத்தலைசிரைத்தவர்களாகையாலே தங்கலையிலே ஒன்றிருப்பதாக நினையார்கள்.

கரைகட்டாக் காவேரிபோலே பரந்துள்ள சாஸ்த்ரங்களிலிருந்து மஹாமதிகள் ஸாரமான விஷயத்தைச் சுருக்கமாகவெடுத்து அநுபவிக்குமாபோலே கடல்போன்ற ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில்

> '' * கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத் * என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமேயாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதியோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் * வரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத் * என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம்போலே அண்ணாந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வமுடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று ... * என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே யென்றும் * இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாகவெண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்''

என்றுள்ள திவ்யஸூக்தி ஸுதாசீகரங்களை நிதியாகக் கொண்டு அநுபவிப்பார்க்கு ஸ்வீகாரத்தில் காலுஷ்யலேசமும் கிடக்க விரகில்லையென்று தலைக்கட்டிநிற்போம்.

---

— வேதவிசாரப் பகுதி —

## ஸ்வரபேதக் கண்ணுடி—முன்தொடர்ச்சி

### (குரு சிஷ்ய ஸம்வாதம்)

குரு—வேதாத்யயநஸர்வஸ்வம், பதபாடபரித்ராணம், பதபாட பரிசுத்தி முதலான க்ரந்தங்களை ஆராய்ந்து பார்த்திருக்கிருயா? அவற்றில் பரீக்ஷித்தால் மயங்காமல் விடையிறுப்பாயா? கேள்விகள் கேட்கட்டுமா?

சிஷ்யன்—ஸஜ்ஜனுயிருக்கின்றேன்; அவற்றிலுள்ள விஷயங்களைமட்டு மல்லாமல், அவற்றில் சிக்ஷிதமான நியாயங்களைக் கொண்டு விடையிறுக்கக்கூடிய கேள்விகளையும் கேட்டருளலாம். த்ருப்திகரமாக விடையிறுப்பேனென்று துணிந்து விஜ்ஞாபிக்கிறேன்.

குரு—பரமஸந்தோஷம்; இதோ கேட்கத்தொடங்குகிறேன்; முதற்காண்டம் முதல் ப்ரச்நத்தில் * தக்ஷிணே யஜமாநஸ்ய * என்கிற பஞ்சாதியில் (விஷ்ணோ) என்பது ஸர்வாநுதாத்தமாயிருக்கின்றது; * சுந்தத்வம் தைவ்யாய * என்ற பஞ்சாதி யில் * இந்த்ராய ததி விஷ்ணோ ஹவ்யம் ரக்ஷஸ்வ * என்றவிடத்தில் அந்த விஷ்ணோ பதமே ஆத்யுதாத்தமாயிருக்கின்றது; இந்த வாசிக்குக் காரணம் சொல்லுவாயா?

சிஷ்யன்—அடியேன்! நன்கு விஜ்ஞாபிக்கிறேன்; இத்தகைய ஸ்வரபேதங் கள் வேதபுருஷனுடைய ஸ்வாதந்த்ர்யத்தினுல் விளைந்ததாகச் சிலர் சொல்லு வர்கள்; இங்ஙனே ஸ்வரபேதமிருக்கிறதென்பதையே பலர் அவதானத்தில் கொள்ளாமலிருக்கிருர்கள். சுர்ணேபி:, விச்வேபி:, தேவேபி: போன்ற பதங்கள் விஷயத்தில் வேதபுருஷனுடைய ஸ்வாதந்திரிய மென்னலாமே யொழிய ஸ்வர பேதம் முதலிய பலவிஷயங்களில் ஸ்வாதந்திரியமென்று வாய்திறக்கவே முடியாது. எல்லாவற்றுக்கும் நிமித்த பேதமுண்டென்பதை வேதாத்யயநஸர்வஸ்வாதி க்ரந் தங்களினுல் தெளிந்திருக்கிறேன். இப்போது தேவரீர் கேட்டவிஷயம் மிகச்சிறிது; மிகப் பெரிய விஷயங்களைக் கேட்டருளவேணுமென்று பிரார்த்தித்திருக்கிறேன். ஆனுல் இது அதிப்ரஸங்கமான விஜ்ஞாபனம்; கேட்டதற்கு விடை கூறவேண் டியவனடியேன். இதோ விஜ்ஞாபிக்கிறேன். வேதத்தில் ஸம்புத்தியான பதங்க ளெல்லாம் நியமேந அநுதாத்தமாகவே யிருக்குமென்பது கல்வெட்டு; ஆனுல் அதற்கு அபவாதமுமுண்டு. ருக்குகளில் பாதாதியாக இருந்தாலும், தண்டாகார மாகச் சொல்லுகிற ஸம்ஹிதையில் வாக்யாதியாக இருந்தாலும் ஸர்வாநுதாத்தமா யிருக்குந் தன்மைமாறி உதாத்தஸ்வரயோகத்தைப் பெற்றேதீரும். இது, விஷ்ணோ என்கிற பதத்தில் மட்டுமன்று; அக்நே, ஆப:, இந்த்ர, இந்த்ராக்நீ, மித்ர, மித்ராவருணு முதலிய பரச்சத பதங்களுக்கும் இதுவே நியாயம். ப்ரக்ருதம் தேவரீர் கேட்ட விடத்திற்குச் சொல்லுகிறேன். * இந்த்ராய ததி விஷ்ணோ ஹவ்யகம் ரக்ஷஸ்வ * என்றவிடத்தில் (இந்த்ராய ததி ஆதநச்மி) என்று ஒரு வாக்யம் முடிவுபெற்று (விஷ்ணோ ஹவ்யகம் ரக்ஷஸ்வ) என்பது அடுத்த வாக்யமாகவுள்ளது; ஆகவே

விஷ்ணோபதம் இங்கு வாக்யாதியாயிற்று. ஆனதுபற்றியே இதில் உதாத்தயோக முண்டாயிற்று • தா விஷ்ணோ பாஹி • என்றவிடத்தில் (தா:) என்பதுதான் வாக்யாதி; விஷ்ணோ என்பது இடையில் தானுள்ளது. ஆகவே ஸம்புத்த்யந்த பதத்திற்கு ஔத்ஸர்கிகமான ஸர்வாநுதாத்தஸ்வரம் அபவாதமடையாமல் உள்ள படியே நிற்கிறது.

குரு—அக்நே ஆப: இந்த்ர, இந்த்ராக்நீ இத்யாதிபதங்களை நீயே ப்ரஸ்தாவித்தபடியால் அவற்றைப் பற்றியும் விவரணம் காட்டு பார்ப்போம். (அதாவது) ஸ்வரபேதமுள்ள ஸ்தலவிசேஷங்களை நிமித்த நிரூபண புரஸ்ஸரமாகக் காட்டவேணும்.

சிஷ்யன்— • அக்நே தேஜஸ்விந் • அக்நே யம் யஜ்ஞமத்வரம் • அக்நே நய ஸுபதா ராயே • என்றிவை போன்ற இடங்களில் வாக்யாதியாதலால் ஔத்ஸர்க்கிகமான ஸர்வாநுதாத்தம் அபவாதம்பெற்று ஆத்யுதாத்தமாயிற்று. • த்வாமக்நே புஷ்கராததி • யா தே அக்நேயாசயா • இத்யாதி ஸ்தலங்களில் அபவாதமில்லாமையால் இயற்கையான ஸர்வாநுதாத்த முள்ளது. ஆப: என்கிற ஸுபந்த பதம் • ஆப உந்தந்து ஜீவஸே • தா ந ஆப: • இத்யாதி ஸ்தலங்களில் ஆத்யுதாத்தமாயிருப்பது இயற்கை. அதுவே ஸம்புத்த்யந்தமானல் ஸர்வாநுதாத்தமாய் விடும். ஹிரண்யவர்ண அநுவாகத்தில் • சிவேந மா சக்ஷுஷாபச் யதாப சிவயா • என்றவிடத்தில் அதுவே ஸர்வாநுதாத்தமாயிருப்பது காணத்தக்கது. இங்கு ஆப: என்பது ஸம்புத்த்யந்தமென்பதை அடுத்துள்ள (பச்யத) (ஸ்ப்ருசத) என்கிற க்ரியைகளால் எளிதில் அறியலாம். முதல் காண்டம் மூன்ருவது ப்ரச்நத்தில் • யதாபோ அக்நியா வருணேதி சபாமஹே • என்ற விடத்தில் (ஆப: அக்நியா: வருண) என்கிற மூன்று பதங்களும் ஸம்புத்த்யந்தங்களே. அங்கு மூன்றும் ஸர்வாநுதாத்தமாக இருக்கவேணடியிருக்க, ஆத்யுதாத்தமாயிருப்பது ஏனென்ருல், மூன்றும் தனித்தனி ஸம்போதனங்கள். ஆகவே அவை ஆதியேயொழிய இடையிலுள்ளவையல்ல. • இஷேத்வாநுவாகத்தில் • ஆப்யாயத்வ மக்நியா: தேவபாகம் • என்றவிடத்தில் (அக்நியா:) என்பது ஆதியன்றிக்கே இடையிலுள்ள படியால்தான் ஸர்வாநுதாத்தமாயிற்று (வருண) என்பதும் • இமம் மே வருண ச்ருதீ ஹவம் • • அஹேடமாநோ வருணேஹ • இத்யாதி ஸ்தலங்களில் இடையிலிருப்பதால்தான் ஸர்வாநுதாத்தமாகவே யிருக்கின்றது. இத்தகைய நுட்பங்கள் வேதாத்யயந ஸர்வஸ்வத்தினலன்றி வேறென்ருல் அறியமுடியாது. (தொடரும்)